Chanos— பால் கெண்டை
Etroplus— செத்த கெண்டை
Gourami— குராமி

SRI A. GOVINDASAMY: சில மீன்கள் வெளி இடங்களிலிருந்து கொண்டு வரப்பட்டிருக்கிறது என்று சொல்லப்பட்டது. எங்கிருந்து கொண்டுவரப்பட்டது, எங்கு வளர்க்கப்படுகிறது என்று அறிய விரும்புகிறேன்?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: பெங்கால், கல்கத்தா முதலிய இடங்களிலிருந்தும் இன்னும் வேறு வெளி நாடுகளிலிருந்தும், துரிதமாக வளரக்கூடிய மீன்கள், இங்கு இல்லாத மீன்கள் கொண்டுவரப்பட்டுள்ளன. அவைகளை பவானி சாகரிலும், ஊட்டியிலும் வளர்க்க வாய்ப்புகள் ஏற்பட்டிருக்கின்றன. இப்போது அதிகமாக குஞ்சுகளை வெளி இடங்களிலிருந்து வாங்கும் தேவை இல்லாமல் இருக்கிறது. இதைப் பார்ப்பதற்கு அங்கத்தினர்களுக்கு விருப்பமிருந்தால் பவானி சாகரிலும், ஊட்டியிலும் சென்று பார்த்துக்கொள்ளலாம்.

SRI N. R. THIAGARAJAN: கனம் அமைச்சர் அவர்கள் மீன் வகைகளைப்பற்றிக் கூறும்போது கனம் அங்கத்தினர்களுக்கு நாக்கில் ஜலம் ஊறியிருக்கும். கனம் அங்கத்தினர்களுக்கு இவைகளின் ருசி தெரிவதற்காக மீன் வகை பதார்த்தங்களைத் தயார் செய்து அவர்களுக்குக் கிடைக்க வழி செய்வார்களா?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: இந்த மீன்கள் கிடைக்குமிடத்தில் தங்கி சாப்பிட்டுப் பார்த்தால் நன்றாக இருக்கும்.

*Railway Minister's speech (instigation to violence)*

* 1080 Q.—SRI A. VEDARATHNAM: கனம் முதல் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மத்திய அரசாங்க ரயில்வே அமைச்சர் அக்டோபர் 12-ந் தேதி காந்தி கிராமத்தில் பேசியபோது நம் மாநில மக்களின் ஒரு சாரார் மனம் புண்படும்படியும், பலாத்காரத்தைத் தூண்டும் முறையிலும் பேசியது நம் அரசாங்கத்திற்குத் தெரியுமா?

(இ) அப்படியானால், இதுபற்றி நம் அரசாங்கம் ஏதாவது நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறதா? அதன் விவரமென்ன?

THE HON. SRI C. SUBRAMANIAM: (a) Government have no information other than what has been reported in certain newspapers.

(b) Government do not consider it necessary to take any action in the matter.

SRI A. VEDARATHNAM: ஸார், இந்த தீண்டாமை என்பது புராணங்களில் இருக்கிறது. அந்த சரித்திரங்களைப் படித்து அதில் நம்பிக்கையுள்ளவர்களுக்கு தவறாக இருந்தாலும் சரியாக இருந்தாலும் நம்பிக்கை மூலம் வந்த பழக்கம். அதை

25th March 1961]

மாற்றுவதற்கு அவர்களிடையே மன மாற்றம்தான் அவசியமே அல்லாமல் அந்த மாதிரி ஆத்திரம் ஊட்டும்படி பேசுவது, எக்ஸ்டெம்போராக, பல விதமாகப் பேசினால் பலருக்கு மனம் புண்படும்படி இருக்கிறது. இதில் எதிர் பார்த்த பலனுக்கு பதில் விரோதமான பலன் விளைவதால், அவதிப்படுவது அவர்களல்ல, இங்கு இருப்பவர்கள் தான். அந்த மாதிரி விளைவுகள் ஏற்படாமல் செய்யவேண்டியது இந்த அரசாங் கத்திலுள்ளவர்களுடைய கடமை அல்லவா? அதைப் பற்றி அவர்கள் யோசிப்பார்களா?

THE HON. SRI C. SUBRAMANIAM: பேச்சினால் சிலருக்கு மனப்புண் ஏற்பட்டு விட்டதாகச் சொன்னார்கள். தீண்டாமையை அனுசரிப்பதால் தீண்டாமைக்கு உட்படுகிறவர்களுக்கு எவ்வளவு மனப்புண் ஏற்படும் என்று கனம் அங்கத்தினர் அவர்கள் யோசித் திருந்தால் பேசியதைப் பற்றி அவ்வளவு ஆட்சேபித்திருக்க மாட்டார்கள் என்பது எனது கருத்து.

*Siruvani river water to Coimbatore*

*1081 Q.—SRI S. M. ANNAMALAI: கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப் பாரா—

சிறுவாணி ஆற்றுத் தண்ணீரை கோயம்புத்தூருக்கு குடி தண்ணிருக்காக பயன்படுத்துவதைக் குறித்து இரண்டு மாநில முதலமைச்சர்களும் பேசி முடிவு கண்டார்களா? விவரமென்ன?

THE HON. SRI M. A. MANICKAVELU: Not yet, Sir. Does not arise.

SRI S. M. ANNAMALAI: ஸார், இது பல ஆண்டுகளாக உள்ள பிரச்னை. கேரள முதல் மந்திரி சிறுவாணித் தண்ணீரைக் கொடுக்க முடியாது என்று கூறியது சர்க்காருடைய கவனத்திற்குக் கொண்டு வரப்பட்டதா? அதன் மீது என்ன நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறார்கள்?

THE HON. SRI M. A. MANICKAVELU: இதைப் பற்றி அந்த ராஜ்ய முதல் மந்திரி பரிசிலனை செய்து, அவர்களைச் சந்திப் பதற்கு அதுபற்றி எழுதுவதாகச் சொல்லியிருக்கிறார்கள்.

*Hostel Day (Madras Engineering College)*

*1082 Q.—SRI V. K. KOTHANDARAMAN: கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப் பாரா—

(அ) சென்னையிலுள்ள பொறியியல் கல்லூரியின் விடுதி விழாக்கொண்டாட்டத்திற்கு விடுதியில் தங்காது கல்வி பயிலும் மாணவர்களிடமிருந்தும் நன்கொடை வசூலிக்கப்பட்டதா?

(இ) அப்படியானால், அதன் காரணமென்ன?